27th March 1961]

SRI A. VEDARATHNAM : இப்போது ஆலய நிர்வாகங்களை அரசாங்கம் எடுத்துக்கொண்டதிலிருந்து ஆலயங்களில் வேலை செய்கிற சிப்பந்திகள் அனைவருக்கும் பே கமிஷன் ரிபோர்ட் படி பே ஸ்கேல் நிர்ணயிக்கப்படுமா ? இந்து மதத்தைச் சேர்ந்த எல்லா வகுப்பினரும் சிப்பந்திகளாக நியமிக்கப்படுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஆலய நிர்வாகத்தை அரசாங்கம் எடுத்துக்கொள்ளவில்லை. அந்த அந்த ஆலய தர்ம கர்த்தாக்கள்தான் நிர்வகித்து வருகிறார்கள். ஆலய நிர்வாகத்தை அவ்வப்போது இலாகா மேற்பார்வை பார்த்து வருகிறது. அவ்வளவுதான். சில உத்தியோகஸ்தர்கள்தான் சர்க்கார் உத்தியோகஸ்தர்களாகக் கருதப்படுகிறார்கள். பே கமிஷன் இவர்களுடைய சம்பள விகிதம் பற்றி சிபார்சு செய்திருந்தால் அது அமுல் செய்யப்படும். மற்றப்படி உத்தியோகஸ்தர்கள் நியமனம் சம்பந்தப்பட்ட வரையில்—மற்ற சர்க்கார் உத்தியோகஸ்தர்களை எவ்வாறு நியமனம் செய்கிறோமோ அவ்வாறேதான் நியமனம் செய்து வருகிறோம்.

*Agricultural Labour Enquiry Committee (Report)*

* 1103 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மத்திய சர்க்காரால் அமைக்கப்பட்ட இரண்டாவது விவசாயத் தொழிலாளர் விசாரணைக் கமிட்டியின் அறிக்கை கிடைத்ததா ?

(இ) அப்படியாயின் அதன் விவரமென்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) Yes, Sir.

(b) Three copies of the summary of the report and its main findings have been placed in the Legislature Library for the use of the Members. The report is under examination.

SRI S. M. ANNAMALAI : இந்த விவசாயத் தொழிலாளர்களுடைய பர் காபிடா வருமானம் 1950-51-ல் இருந்ததைவிட இப்போது மிகவும் குறைந்திருக்கிறது என்பது உண்மையா, இல்லையா ? இப்படிக் குறைந்து போனதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் பொது விவாதத்தின்போதே இதைப்பற்றிச் சொன்னார். உடனே அதற்காகத்தான் இதைப் பற்றி ரிசர்ச் செய்து பார்த்தேன். முதல் என்க்குவயரியில் இருந்ததைவிட இரண்டாவது என்க்குவயரியில் குறைந்திருப்பதற்குக் காரணம் முதல் தடவை எவ்வாறு புள்ளிவிவரங்களைச் சேகரித்தார்களோ அதேபோல இரண்டாவது முறை சேகரிக்கவில்லை. அந்த ஒரே அடிப்படையில் சேகரித்திருந்தால்தான் இரண்டு புள்ளி விவரங்களையும் ஒப்பிட்டுப் பேச முடியும். ஒரே அளவுகோலாக அது இருந்தால்தான் ஒப்பிடுவது சரியாக இருக்கும். அப்படி இல்லை. ஆனால்

அவ்வாறு முன் ஒரு மாதிரியாகவும், பின் ஒரு மாதிரியாகவும் அந்தப் புள்ளி விவரங்களைச் சேகரித்திருக்கிறார்கள் என்பதற்கு இதைப் படித்துக்காட்ட விரும்புகிறேன்.

Sir, I shall now read one part of the answer in English.

"Difference in imputation procedure for payments in kind as between the First and Second Enquiry, and the relative importance of payments in kind at both the two points of time. In the First Enquiry, only 31·3 per cent of the man-days were paid for in kind while in the Second Enquiry, the corresponding percentage was 40·5. The cash imputation for payments in kind was done at rural retail prices in the First Enquiry (1950–51) and at wholesale prices in the Second Enquiry (1956–57). In view of this difference in procedure, the relative fall during 1956–57 might be apparent and not real to some extent."

இதுதான் முக்கியமான காரணம். முதல் விசாரணையில் ரீடைல் ப்ரைஸ் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இரண்டாவது விசாரணையில் ஹோல் சேல் ப்ரைஸ் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ரீடைல் ப்ரைஸைவிட ஹோல்சேல் ப்ரைஸ் நிச்சயமாகக் குறைச்சலாக இருக்கும். அதோடு இன்னொன்று. 1950-51-ல் ரேஷனிங் இருந்த சமயம். ரீடைல் ப்ரைஸ் என்றால் ரேஷன் கடை விலையைக் கணக்கெடுத்துக்கொண்டார்களா, ப்ளாக் மார்க்கெட் அவுட் சைட் ப்ரைஸ் கணக்கெடுத்துக்கொண்டார்களா என்கிற விவரமும் காணப்படவில்லை. அதனால்தான் இந்த மாறுதல் தென்படுகிறது. அதேசமயத்தில் விவசாயிகளுடைய மொத்த வருமானம் இங்கே உயர்ந்திருக்கிறது என்பதாக அந்த ரிபோர்ட்டில் கண்டிருக்கிறது. உபதொழில்களிலிருந்து வருகிற வருமானத்தையும் சேர்த்தால் நிச்சயமாக அதிகமாக இருக்கும். இதை சாப்டர் எட்டு, பாரா 1-ல் கொடுத்திருக்கிறார்கள்.

Compared with the position in 1950–51, the average household income was higher in 1956–57 in West Bengal, Assam, Andhra Pradesh, Madras, Bombay, Mysore and Punjab.

**SRI S. M. ANNAMALAI** · அவர்கள் புள்ளி விவரம் சேகரித்தது தவறு என்றால் விவசாயிகளுடைய பர் காபிடா வருமானம் எவ்வளவு? அதிகரித்திருக்கிறதா, குறைந்திருக்கிறதா என்பதைக் காண ஒரு தனி கமிட்டியைப் போட்டு பரிசீலிக்க சர்க்கார் முன் வருவார்களா?

**THE HON. SRI R. VENKATARAMAN** : அதற்காக ஒரு கமிட்டி போடவேண்டிய அவசியம் இல்லை. பர் காபிடா வருமானம் 'டிரண்டை'க் கண்டுபிடிக்க உதவியாக இருக்குமே தவிர வேறு எதற்கும் பயன் இல்லை. சென்னை ராஜ்யத்தில் விவசாயிகளுடைய மொத்த வருமானம் உயர்ந்திருக்கிறது என்பதை அதே ரிபோர்ட்டில் சொல்லியிருக்கிறார்கள்.